# இலங்கைப் - -
# - - புலவர்கள்



ஒற்றுமை நிலையம்
8, வியாசராவ் தெரு,
தியாகராயநகர், மதராஸ்
1952

விலை அணு 8

# பொருளடக்கம்



Grateful acknowledgement is made to A. I. R, Madras for permission to publish the broadcast talks on 'ILANGAI PULAVARGAL'

# இலங்கைப் புலவர்கள்

## ஆறுமுக நாவலர்

[டி. பி. மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை]

நாம் பேசுகிறோம். நம்முடைய பேச்சு ஒருவகை இலக்கிய மென்பதை நினைக்கவும் நமக்கு நேரமில்லை. பாட்டு மட்டுமா இலக்கியம்? உரை நடையும் தான் இலக்கியம். இந்த உரை நடையிலேயே நாம் எல்லோரும்-கற்றவரும், கல்லாதாரும், கிழவரும், சிறுவரும், ஆண்களும் பெண்களும்--பேசக் கற்றுக்கொண்டது முதல் மூச்சடங்கிச் சாகும் வரையில் பேசி வருகிறோம். கேட்டாலும் இது ஒரு புதுமையாகத் தோன்றலாம். மோலியர் என்ற பிரெஞ்சு நாடகாசிரியர் தாம் படைத்த வணிகரை—ஆ....நான் உரை நடையிலா பேசுகிறேன்-என்று வியந்து கூறுமாறு செய்கிறார்.

இலக்கியமென்றால் கம்பன் பாட்டும் வள்ளுவன் பாட்டும் போன்றவையே நினைவிற்கு வருகின்றன. நம் பேச்சு நினைவிற்கு வருவதே இல்லை. ஆனால் காலம் மாறி வருகிறது. உரை நடை பழையதொரு இலக்கியம். மனிதனுடைய பேச்சோடு பிறந்ததன்றோ அது? விரைந்தெழுதும் கருவிகளில்லாத போது, பேச்சினை யார் எழுதிவைக்க முடியும்? சுருக்கெழுத்தோ இல்லை. அச்சும் இல்லை. வானொலியும் இல்லை. எழுதி வைத்தாலும் எழுதியதனைக் கற்கத்

தெரிந்தவர்கள் பலர் இல்லை. இன்று ஆயிரக்கணக் கில் நூல்களைப் பதிப்பிப்பதால் நூல்கள் எளிய விலை யில் யாரும் வாங்கலாம். அன்றோ ஒவ்வொருவருக் கும் தத்தம் நூலைத்தாமே எழுதிக்கொள்ளவேண்டும். ஆகவே இன்றியமையாத நூல்களை மட்டுமே எழுதி வைத்தார்கள். இன்று தந்திச்செய்தி எழுதுவோர் சொற் சுருக்கம் தேடுவதுபோல் அன்று புலவர்கள் சொற்சுருக்கம் தேடி அலைந்தனர். நூல் நிலையங்கள் எங்கும் இல்லாத அந்தக்காலத்தில் கற்றதையெல் லாம் தம் மூளையிலேயே வைத்துக்கொண்டு நடக்கும் நூல் நிலையங்களாகவே விளங்கினர் ஒவ்வொரு அறிஞரும். வேதங்களை பலஆயிரம் ஆண்டுகளாய் காத்து வருவது பாரதநாடு. வேதம் உலகறிந்தது. ஆனால் எல்லாக் கலையையும் எம்மொழியிலும் இவ் வாறே காத்து வந்திருக்கிறது நம் நாடு.

எழுதுவதைப் பாட்டாகச் சூத்திரமாக எழுதினால் அளவு சுருங்கும், பொருளும் தெளிவுபடும். ஆகை யால் நூலென்றால் பாட்டென்ற நினைவே வருகிற வழக்கம் வேரூன்றிப் போய்விட்டது. தொல்காப்பி யத்திலும்உரைநடையைப்பற்றிய குறிப்புகள் உண்டு. கதை முதலியனவும் உரை நடையில் வழங்கின. பாட்டி கதை சொல்லாமலா அன்று வாழ்ந்திருப் பாள்? சிலப்பதிகாரம், தகடூர் யாத்திரை, பெருந்தேவ னார் பாரதம் முதலிய பழைய நூல்களில் இடை யிடையே உரைநடை வரக்காணலாம். ஆனால் பேச் சுப்போல் நெகிழ்ந்தோடாமல் ஒரே மூச்சாக விறைத் துக்கொண்டு அவை நம்மை உருட்டி வெருட்டக்

காண்கிறோம். இறையனார் அகப்பொருளுரை ஒரு சிறந்த உரை நடை நூல். சூத்ரத்திற்குப்தி பொருள் கூறுவதோடு சோலை முதலியவற்றைப் பற்றிய புனைந்துரையும் அன்பு முதலியவற்றைப்பற்றிய தத்துவ விளக்கமும் அங்கு உண்டு. ஆனால் அங்கு பாட்டு நடை காதில் கேட்காமல் இல்லை. எதுகை மோனைகள் அளவுக்குமீறி இன்ப மூட்டுகின்றன. நூல்களின் உரைகளை எழுதிய இளம்பூரணர் நச்சினார்க்கினியர் பரிமேலழகர், சேனாவரையர், பேராசிரியர் முதலானோரும் சுருக்கமாக எழுதிவந்தாலும் இடையிடையே எதுகையும் மோனையும் வந்துவிழும். வைணவர்களும் சைவர்களும் வடமொழியும் தமிழும் பாதிப் பாதி கலந்து மணிப்பிரவாள நடை எழுதினர். உரைகளும் தத்துவ நூல்களும் எழுதினர். இவற்றில் ஓர் அழகு உண்டு. ஆனால் இங்கும் சூத்திர நடையே காண்கிறோம். சிவஞானயோகிகள், சிதம்பரசுவாமிகள், இராமலிங்க சுவாமிகள்-என்ற பெரியார்களது உரை நடைகள் ஓட்ட முடையவை, விளக்கம் கொண்டவை. ஆனால் இங்கும் பேச்சின் எளிமை இல்லை. என்றும் என்றும் என்றோ, என்பதுவும் என்பதுவும் என்றோ அடுக்கிக்கொண்டே பக்கம் பக்கமாக ஒரு சொற்றொடர் நீண்டுகொண்டே போகக்காண்கிறோம். பதிரங்கள் கல்வெட்டுகள் முதலியனவும் அவ்வாறே விளங்கின. அனந்தரங்கம் பிள்ளை தினசரி குறிப்பு எழுதும்போதும் இவ்வாறே எழுதுகிறார்.

அச்சுயந்திரம் ஒரு புரட்சி வித்து. பலரும் படிக்கக்கூடிய நிலை அதனால் ஏற்படுமன்றோ?...பிறநாட்டிலிருந்து வந்த கிருஸ்தவ அறிஞர்கள் தமிழினைஎழு

திப் படித்து அறிவினை வளர்த்துக் கொண்டார்கள். இவர்கள் கற்கும்போது எழுதியவை யெல்லாம் உரை நடை நூலாகுமன்றோ?...இவர்கள் வரும்போது மேல் நாட்டில் உரைநடை இலக்கியம் வேரூன்றி விட்டது. இளைஞர்களுக்கு வேண்டிய நூல்களை எழுதவேண்டும் என்ற எண்ணம் கிருஸ்தவர்களுக்கு எப்பொழுதும் இருந்துவந்தது. எழுதப்படிக்கத் தெரியாத மக்க ளிடையே சிறப்பாக கிருஸ்தவ மதத்தைப் பரப்ப முற்பட்டபோது அவ் வெளியவர்கள் அறிந்து கொள் ளக்கூடிய பேச்சுத் தமிழிலன்றோ நூல்எழுதி எழுதப் படிக்க கற்பிக்கமுடியும்?.இவற்றுக்கெல்லாம் மேலாக பைபிளன்றோ அவர்களது வேதம். அதனை அவர வர்கள் மொழியில் கற்பிக்க முற்பட்டனர். பைபிள் மிகச்சிறந்த உரை நடை இலக்கியம். அதன்மொழி பெயர்ப்பு எந்த மொழியிலும் சிறந்த உரை நடை இலக்கியமாக விளங்குகிறது. பலபல தீர்க்கதரிசி களின் சொற்பொழிவுகள் நிரம்பிய அந்த நூல் பேச் சிலக்கியமாகவும் திகழ்கிறது. சிறு சிறு சொற் றொடர்கள் மணிக்கோவையாக அங்கே வரக்காண் கிறோம். எனவே இவர்கள் கிருஸ்தவ மதத்தைப் பரப்புவதென்றாலேயே உரை நடை இலக்கியத்தைப் பரப்புவதென்றன்றோ பொருள்?...

பெஸ்கியின் அவிவேக பூரண குருகதை ஒரு சிறந்த உரை நடை இலக்கியம். கடவுள் வாழ்த்து நூல்கள் முதலியனவும் வெளி வந்தன. பைபிள் மொழி பெயர்ப்புகளும் பல தமிழில் வெளிவரத் தலைப் பட்டன. பைபிள் மொழிபெயர்ப்பு வரலாறு கொண்டே கடந்த இரண்டு நூற்றாண்டுகளின் தமிழ்

உரைநடை வளர்ச்சியை அறியலாம். இந்த உரை நடையை கிறிஸ்தவத் தமிழென்று இகழாமல் தமிழ் முறையென்று பாராட்டக்கூடிய வழியில் வளர்த்த பெருமை ஆறுமுக நாவலரையே—சாரும்.

இவர் பிறந்தது யாழ்ப்பாணம். பழந் தமிழர் இலங்கையில் குடியேறிய இடம் அது. இலங்கை வாழ தமிழ் சென்ற காலம் முன்னாள். இன்னாளில் தமிழ் வாழ இலங்கை உதவிய புலவரே நாவலர் பெருமான். நாவலரென்றால் ஆறுமுக நாவலரின் நினைவே வரும். தமிழ் நாட்டிலும் இலங்கையிலும் சைவத் தமிழ் சொற்பொழிவாற்றிய பெருமை கண்டு வியந்து அந்த உலகம் நாவலரென்று அவரைப் போற்றியது. பேச்சுத் தமிழின் வீறெலாம் அறிந்த அவர் உரை நடையின் நுட்பத்தை உணர்ந்து இந்த நூற்றாண்டில் உரை நடைத் தந்தையாக விளங்குவதில் என்ன வியப்பு.

மேல்நாட்டு நாகரிகம் மிக மிக வேரூன்றிய இடம் இலங்கை. இன்றும் அந்த நாகரிகத்தின் பயனை இந்திய மக்களினும் இலங்கை மக்களிடை நன்கு காணலாம். தமிழ்ப் பெண்களெல்லாம் அறிவுபெற்று நாகரிக வாழ்வு வாழ அங்கு காணலாம். இந்தத் துறையில் கிறிஸ்தவ பாதிரிகள் பெரும் தொண்டாற்றினர். தெருவுக்கு ஒரு பள்ளிக்கூடம் உள்ள இடம் யாழ்ப்பாணமாகும். இன்று அங்கு எல்லோரும் ஆங்கிலம் அறிவர். ஆதலின் அனைத்துக் கலையினையும் ஆங்கிலத்தில் கற்பதே அவர்களுக்கு இன்று எளிது. ஆனால் சென்ற நூற்றாண்டில் அறிவு புகட்டவந்த கிறிஸ்தவக் கல்லூரிகள் தமிழிலன்றோ முதலில் அறி

ஊட்டி இருக்க முடியும். அதற்கென பல நூல்களை யும் தமிழில் மொழி பெயர்க்க முற்பட்டன. வட்டக் கோட்டைக் கல்லூரி இந்த வகையில் செய்த முயற்சி மிகப் பெரிது. அகராதியை தொகுக்கின்ற முயற்சி யிலும் (Percival-Winslow) முதலியோர் முற்பட்டிருந் தனர். பைபிளைத் தமிழில் நன்கு மொழி பெயர்க் கும் முயற்சியும் இந்த நூற்றாண்டில் வெற்றியுடன் முடிவு பெற்றது. இவற்றுக்கெல்லாம் தமிழறிஞர் துணை வேண்டுமன்றோ?. எனவே மேனாட்டு நல்லறி ஞரோடு ஒத்துழைத்த தமிழறிஞர் வழியே தமிழ் உரை நடை வாழ்ந்தது.

கிறிஸ்தவர்கள் கற்றவர்களுக்கு மட்டுமன்றி அனைவருக்கும் பயன்பட முந்தினார்கள். இளைஞரின் மனத்தைக் கவர்வதே அவர்கள் நோக்கம். ஆகை யால் இங்கு வளர்ந்த தமிழ் நடை எளிமையும் தெளி வும் நிறைந்தது. பேச்சு நடையோடு ஒத்துப்போக வேண்டுவதாயிற்று. பைபிளை மொழி பெயர்க்கும் தொண்டில் முதலில் ஒத்துழைத்தவர் ஆறுமுக நாவ லர். இதனால் இங்கு நாம் மேற்கூறிய பண்புகளெல் லாம் இவர் உரை நடையில் வளருவதாயின. இவர் சிறந்த மெய்த் தொண்டர். கிறிஸ்தவம்போல் சைவ மும் மக்களிடையே பரவவேண்டும் என்று கனவு கண்டவர். இளையரும் இவர் மனதைக் கவர்ந்தனர். அவர்கள் மனதை இவர் கவர விரும்பினார். இவர் இயற்றிய சைவ வினா விடைகள் இளைஞர் வயதுக் கேற்ப சிறிது சிறிதாக வளர வேண்டிய சைவக் கொள்கையை விளக்குகின்றன. பால பாடங்கள் அதற்கு முன் இருந்திருக்கலாம். வகுப்புக் கேற்ப

மொழிக் கலை வளரும் முறையில், நல்ல தமிழில், மொழிச் சிக்கல்களை அறிந்து தமிழ்ப் பண்பாட்டிற்கும் நாட்டிற்கும் உகந்த வகையில் முதல் முதலில் எழுந்த பால பாடங்கள் இவர் எழுதிய பால பாடங்களேயாகும். கருத்துக்கள், படங்கள், பளபளப்பான பகட்டுகள் என்றவகையில் இந்நாளைய நூல்கள் இவர் நூல்களை வெல்லலாம். ஆனால் வயதுக்கேற்ப வளரும் மொழிச் சிக்கலோடு வளரும் அழகு இவர் நூலில் மட்டுமே இன்றும் விளங்குகிறது.

சொற்பொழிவாளரென இவரைக் கூறினோம். துறவுபூண்ட மெய்த் தொண்டர் என்றோம். மதம் வளர்க்கும் திருநோக்குடையார் என்று கண்டோம். இவையெல்லாம் பொதுமக்கள் ஏற்று நல்வழிப்படலன்றோ அவரைத் தூண்டும்.

திருவிளையாடற் புராணம், பெரியபுராணம், கந்த புராணம் முதலிய நூல்கள் அந்நாளில் மக்கள்மனத்தினைக் கவர்ந்தவை. இவற்றின் கதைகளை உரை நடையில் எழுதியவர்கள் பலர். நாவலர் எழுதிய திருவிளையாடற் புராணக் கதைகளும் பெரிய புராணக் கதைகளும் இன்றும் தலை சிறந்து விளங்குகின்றன. பெரிய புராணத்தில் ஒரு பகுதிக்கு சைவமத ஆராய்ச்சியாக இவர் எழுதிய சூசனங்கள் அறிவுக் கண்ணாடியாக இன்றும் நிலைத்து விளங்குகின்றன. இவர் பதிப்பித்த நூல்களும் இவர் உரை நடையை வளர்க்க உதவின. இவர் சிறந்த பதிப்பாசிரியர். நாவலர் பதிப்பு என்றாலேயே நல்ல பதிப்பு என்று தமிழ்நாடு முழுவதும் நம்பியது. முதலில் இவர் பதிப்பித்தது சிதம்பர சுவாமிகளது உரையேயாகும். பண்டை

உரை ஆசிரியர் உரைபோலல்லாது ஏறக்குறைய இந் நாளைய நடையில் தெளிவாய கட்டுரைச் சுவைபடச் செல்வதே இந்த உரையின் இயல்பாகும்.

இந்த இயல்புகள் ஆறுமுக நாவலர் உரைகளில் வரிக்குவரி நிழலிடக் காண்போம். சேனு வரையர் உரையும், திருக்கோவையார் உரையும் இவர் வெளி யிட்டன. இங்கே கருத்தின் கடுமையேயன்றி உரை நடையின் கடுமை இல்லை. பொருளாழமும், விளக்க மும் அறிவும் தரும்பும் உரைகள் இவைகள். இவை யும் நாவலர் பெருமானுக்கு மேல்வரிச் சட்டமாக அமைந்தன. இப்பொருளாழத்தில் ஈடுபட்டு நன்னூல் விருத்தி, பிரயோக விவேகம், இலக்கணக் கொத்து, இலக்கண விளக்கச் சூருவளி, தொல்காப்பியச் சூத் திர விருத்தி முதலிய நூல்களை இவர் பதிப்பித்தார். இளையோர் கற்கும் நன்னூற் காண்டிகையும், உரை நடை இலக்கணமும் இதன்பயனுக இவர் இளைஞருக் குத் தந்த பரிசில்கள். நன்னூற் காண்டிகை என் றும் இளைஞர் உலகில் நிலைத்து வாழும். பெரியபுரா ணம், கந்தபுராணம், திருவாதவூரடிகள் புராணம் என் பவற்றினைப் பிழையற ஆராய்ந்து இவர் பதிப்பித் தார். இந்தச் செய்யுட்கள்-சிறப்பாக பெரியபுரா ணச் செய்யுட்கள்-சைவமும், தமிழும் சுவை சொட் டச் சொட்ட தெள்ளத்தெளிய ஆற்ருெழுக்காக ஓடு வன. இவற்றின் எளிமையும், இனிமையும், ஆற்ரு ழுக்கும் இவர் உரைநடையில் கலந்து இனிப்பன வாயின. இவர் எடுத்த வேலையெல்லாம் இவ்வாறு பேச்சுத்தமிழாக விளங்கும் உரை நடையை இளைஞர் மனத்தில் பசுமரத்தாணி அறைந்தாற்போல வேரூன்

றவைத்து வளர்க்கும் வகையாக அமைந்தது ஒரு வியப்பு.

இதற்கேற்ப காலமும் துணை செய்தது. அச்சு யந்திரங்கள், நூல்கள் கற்பதில் மக்களிடத்தே ஒரு ஆர்வம், இளைஞர் பள்ளிகள் தோற்றம், நம் நாட்டில் ஒரு புத்துணர்ச்சி இவை இவரைத் தமிழுலகு அறியச் செய்தன. முதலில் கிறிஸ்தவர் தொடர்பு, பின்பு சைவ மக்கள் தொடர்பு, தமிழாசிரியர்களது தொடர்பு-இவை இவருக்குப் பெரிய வெற்றியைத் தந்தன. இடம், பொருள், ஏவல் எல்லாம் இவரது உரைநடையை வளர்க்கவே எழுந்தன போன்று தோன்றின. இலக்கணப் புலமையில் தலைசிறந்து இலக்கணத்தின் நுட்பத்தினை அறிந்த நாவலர் பெருமான் இலக்கண வரம்பினைக் கடப்பரோ?...பேச்சுத் தமிழென்றால் கொச்சைத் தமிழ் என்று பலர் நினைப்பதுபோல் இவர் நினையாது தடுத்தது இந்த இலக்கண உணர்வேயாகும். சிறு சிறு வாக்கியங்களின் திட்பம், அவை கோவையாக பத்திபத்தியாக ஒற்றுமை நயம்பட்டு விளங்கும் நுட்பம், கட்டுரை முழுதும் ஒரு பொருளாய் அமையும் இனிமை, கருத்தின் தெளிவு, சொற்களின் எளிமை, அழகு, ஆரவாரமில்லாதது பிறர் அறியாமல் உள்ளுக்குள்ளேயே அமைந்து விளங்கும் இலக்கண நயம்-இவையெல்லாம் இவர் உரை நடையில் காணலாம்.

உயர்ந்த செந்தமிழ் என்று ஒருபுறமும், கொச்சைத் தமிழென்று மற்றொரு புறமுமாக மேடும் பள்ளமுமாக இருந்த தமிழ்ச்சுவரை சமப்படுத்தினர். வெண்சுதை பூசினர். ஒரே வெள்ளை ஒளியில் திக

முச் செய்தார். ஆம்....அங்கே மேடுபள்ளங்களோடு அழகிய ஓவியங்களும் மறைந்துபோயின. இவரது உரைநடையில் உரைநடை ஓவியங்களைக் காணமுடியாது. சிவஞான யோகிகளது சினம் தோன்றினும் அதுவும் அடங்கி ஒடுங்கியே மெல்ல ஊர்ந்து வருகின்றது இவருடைய நடையில். உணர்ச்சி யென்பதற்கே ஒரு சிறிதும் இடமில்லாமல் இவரது உரைநடை ஓடுகிறது. முதலிலிருந்து முற்ற முடியும் வரை ஒரே நடைதான். ஒரு வேற்றுமையும் இல்லை. உலகம் அவ்வாறு உணர்ச்சியேயின்றி ஒரே நடையிலா நடக்கிறது?....அளவுக்கு மிஞ்சினால் அமுதமும் நஞ்சாம்-என்பதன்றோ பழமொழி? ஆதலால் ஒரே நடையில் முற்ற முடியச்செல்லும் இவர் நூல்கள்—உரை நடை நூல்கள்-அவ்வகையில் நம்மை களைத்து வீழச் செய்கின்றன. ஆனால் உணர்ச்சி ததும்ப எழுதப்பெறுவன, என்று இன்று பாராட்டப்பெறும் நூல்கள் வெறும் சொல்லாரவாரமும் வெறியாட்டமுமாக அமைவதனைக் காணும் பொழுது இவர் நடையின் அழகு புலனாகிறது. செய்யுட்களைப் பதிப்பித்த தோடு செய்யுட்களைப் பாடும் பாவாணராகவும் இவர் விளங்கியிருந்தால் உணர்ச்சியையும் பெரியபுராணம்போல் அடக்கியாண்டு அழகு பொழியச் செய்திருக்கலாம்.

உரை நடை என்றால் உணர்ச்சிக்கு இடமில்லை என்று பலர் கருதினர். ஷேக்ஸ்பியர் என்ற உலகம் போற்றும் நாடகாசிரியர் தம்முடைய பின்னுளைய நாடகங்களில் உணர்வு ததும்பப் பேசும் இடங்களிலெல்லாம் உரை நடையாகவே பேசுவதனைக்காணும்

பொழுது உரை நடை இலக்கியத்தின் நுட்பத்தினை உணர்ந்து மகிழ்கிறோம். இந்த மகிழ்ச்சி ஆறுமுக நாவலர் அடையவில்லை என்பது உண்மையே. ஆனால் கரடு முரடாக கரம்பாய்க்கிடந்த பழைய நிலத்தினை உழுது பரம்படித்து, விதைவிதைத்து, களைபிடுங்குகின்ற தொழிலை இவர் செய்ய வேண்டியதாயிற்று. பின்னன்றோ கண்ணுக்கினிய பச்சைப்பயிர் காட்சியும், வாய்க்கினிய உணவும், விருந்தும் வருதல் கூடும். பரம்படித்துக்களை பிடுங்கும்போது—உணவு உணவு-என்று கூவினால் பயனென்ன? ஆதலின் உரை நடையின் தந்தையாய் இந்நாளைய உரை நடைக்கு அடிகோலினார் நாவலர். அவர்வாழ்க....அவரது அடிச் சுவட்டைப் பின்பற்றி உரை நடையை ஷேக்ஸ்பியர் கண்ட கொடுமுடியினும்—வைத்துக் கண்டு இன்புறுவோமாக.

வாழ்க செந்தமிழ் உரை நடை

## தாமோதரம் பிள்ளை (1832—1901)

[ஆர். பி. சேதுப்பிள்ளை]

கடல் சூழ்ந்த இலங்கையிலே கன்னித்தமிழ் தொன்றுதொட்டு வாழ்ந்து வருகின்றது. அந்த நாட்டிலே செந்தமிழ்ப் புலவர் பலர் தோன்றினர்; தமிழ் மொழிக்குத் தொண்டு செய்தனர். பாவலராய் விளங்கினர் சிலர்; நாவலராய்த் திகழ்ந்தார் சிலர்; பண்டிதராய்ப் பணிசெய்தார் சிலர்; பழந்தமிழ் நூல்களைப் பரிசோதித்து வெளியிட்டார் சிலர். இத்

தகைய பெருமக்களின் உழைப்பினலேயே இன்று நம் தாய்மொழியாகிய தமிழ் புத்துயிரும் புது வாழ்வும் பெற்று விளங்குகின்றது.

தமிழகத்திலே வாழ்ந்த டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் தமிழின் உயிர் நாடியாகவுள்ள சங்கநூல்களையும் காவியங்களையும் ஆராய்ந்து பதிப்பித்து அழியாப்புகழ் அடைந்தார்கள். ஐயர் அவர்களைப் போலவே அருந்தமிழ் நூலைத் தேடியடைந்து, ஆராய்ந்து அச்சிட்டு வெளிப்படுத்தியவர் இலங்கை அறிஞராகிய தாமோதரம் பிள்ளையவர்கள். அவர் தமிழ்மணங் கமழும் யாழ்ப்பாணத்திலுள்ள சிறுப்பிட்டி என்னும் சிற்றூரிலே சுமார் நூற்று இருபது ஆண்டுகளுக்கு முன்னே தோன்றினர்; ஆங்கிலமும் தமிழும் ஆர்வமுறப் பயின்றார். இளமையிலேயே தமிழன்பு அவருள்ளத்தில் தழைத்தது. அந்நாளில் யாழ்ப்பாணத்திலுள்ள சுன்னகம் என்ற ஊரிலே சிறந்த தமிழ்ப் புலவராய் விளங்கிய முத்துக்குமாரக் கவிராயர் அவர்களிடம் அவர் இலக்கியமும் இலக்கணமும் கற்றார். தமிழ்த்தொண்டு செய்வதற்கு ஏற்ற அறிவும் ஆர்வமும் வாய்ந்த தாமோதரம்பிள்ளைக்குத் தமிழ்நாடு தக்கதொரு வாய்ப்பினைத் தந்தது. சென்னையம்பதியில் நடைபெற்ற தினவர்த்தமானி என்னும் தினசரிப் பத்திரிகையின் ஆசிரியராகப் பிள்ளையவர்கள் அமர்ந்தார். அப்பத்திரிகையின் வாயிலாக அவர் புலமைத்திறம் நன்கு புலனாயிற்று. சென்னை அரசாங்கத்தார் அவரை இராஜதானிக் கல்லூரியில் (Presidency College) தமிழாசிரியராக நியமித்தார்கள். அந்த வேலையில் இருந்துகொண்டே அவர்

சென்னைப் பல்கலைக் கழகத்தில் பி. ஏ. பட்டம் பெற்றார். அவருடைய நிர்வாகத் திறமையையும் நெறிமுறையையும் கண்ட அரசாங்கத்தார் அவரைத் துரைத்தன வேலையில் அமர்த்தினர். இருபது ஆண்டுகள் அரசாங்க வேலைபார்த்து அவர் ஓய்வு பெற்றார். அவருடைய நேர்மையையும் திறமையை யும் பாராட்டிச் சென்னை அரசாங்கம் 'ராவ்பகதூர்' என்ற பட்டமளித்தது. துரைத்தன வேலையிலிருந்து ஓய்வு பெற்றபின்னர் பிள்ளையவர்கள் கும்பகோணத் தில் வக்கீல் தொழில் நடத்தினர்; சிலகாலம் புதுக் கோட்டை அரசாங்கத்தில் நீதிபதியாகவும் சேவை செய்தார்

இவ்வாறு பத்திரிகை ஆசிரியராகவும், போத காசிரியராகவும், உத்தியோகஸ்தராகவும், வக்கீலாக வும், நீதிபதியாகவும் பிள்ளையவர்கள் பணி செய்தா ரேனும் நிலைத்த புகழ் அவருக்குத் தமிழ்ப்புலமை யின் வாயிலாகவே கிடைத்தது. கும்பகோணத்தில் வக்கீலாயிருந்தபோது அங்கு அரசாங்கக் கல்லூரி யில் தமிழாசிரியராயிருந்த சாமிநாதையரவர்களின் பழக்கம் பிள்ளையவர்களுக்கு ஏற்பட்டது. பழைய தமிழ் நூல்களின் ஏட்டுச் சுவடிகளைத் தேடுவதிலும் அவற்றைப் பழுது பார்த்துப் பரிசோதிப்பதிலும் மெய் வருத்தம் பாராது மனம் சலியாது ஈடுபட்டிருந்த ஐயரவர்களும் பிள்ளையவர்களும் ஒத்த உணர்ச்சியால் உயரிய நண்பர் ஆயினர். அப்போது சிந்தாமணி என்னும் சிறந்த பெருங்காவியத்தைப் பதிப்பித்ததற் காக ஐயரவர்கள் ஆராய்ந்து கொண்டிருந்தார்கள். நற்றாமரைக் கயத்தில் நல்லன்னம் சேர்ந்தாற்போல்

அவர்களோடு பிள்ளையவர்கள் நாள்தோறும் பழகி அளவளாவினார்கள். சிந்தாமணியின் நயங்களையும் கம்பர் கவித்திறனையும் இருவரும் மனமாரப் போற்றி வாயாரப் பேசி மகிழ்ந்த செய்தியை 'என் சரித்திரம்' என்ற நூலிலே ஐயரவர்கள் எழுதியுள்ளார்கள்.

கும்பகோணத்தில் இருந்த பொழுது தாமோதரம் பிள்ளையவர்கள் அச்சிடப்படாத பல அருமையான தமிழ் நூல்களைப் பனையோலைச் சுவடிகளைக் கொண்டு பரிசோதித்துப் பதிப்பிக்கத் தொடங்கினார். தமிழ் நாட்டிலே இலக்கணப் பயிற்சி குன்றிவிடலாகாது என்று எண்ணி, தொல்காப்பியம், இறையனார் அகப் பொருளுரை, வீர சோழியம், இலக்கண விளக்கம் இவற்றைப் பதிப்பிக்கும் வேலையில் ஈடுபட்டார். இந்நூல்களை விலை கொடுத்து வாங்கிப் படிப்பவர் மிகச் சிலரே என்பதைப் பிள்ளையவர்கள் அறியாதவ ரல்லர். ஆயினும் கைப்பொருளைச் செலவழித்தாகி லும் பழந்தமிழைப் பாதுகாத்தல் வேண்டும் என்னும் ஆசையே அவரை உந்துவதாயிற்று. இந்த நோக் கத்தை அவர்தாமே ஒரு பதிப்புரையில் வெளியிட்டுள் ளார். அவர் கூறுகின்றார் :—'பழைய சுவடிகள் யாவும் கிலமாய் ஒவ்வொன்றாய் அழிந்து போகின் றன. துரைத்தனத்தார்க்கு அதின்மேல் இலட்சி யமில்லை. சரஸ்வதியைத் தம்பால் வசிக்கப்பெற்ற வித்வான்களை அவள் மாமி (இலட்சுமி) எட்டியும் பார்க்கின்றாளில்லை. இந்த நிலையில் பழைய தமிழ் நூல்களைப் பாதுகாத்தற் பொருட்டு அடியேன் ஏட்டுப் பிரதிகள் தேடிப் பரிசோதித்து அச்சிடுவதில் புத்த கங்கள் விலை போகாமல் நஷ்டம் நேரிடுகின்றது.

என்று முறையிடுகின்றார்.

அவர் பதிப்பித்த காலத்தில் ஏட்டுச் சுவடிகள் பெரும்பாலும் எடுப்பாரும் அடுப்பாருமின்றி அவல மாய்க் கிடந்தன. அவற்றைப் பாடுபட்டுத்தேடிப் பரிசோதித்த பிள்ளையவர்கள் கூறுகின்றார் "ஏட்டுச் சுவடிகள் கெட்டுச் சிதைந்து கிடக்கும் நிலைமையைத் தொட்டுப் பார்த்தால் அன்றோ தெரியவரும்? ஏட்டை எடுக்கும்போது ஓரம் சொரிகிறது; கட்டை அவிழ்க்கும்போது இதழ் முரிகிறது; ஏட்டைப் புரட்டும்போது துண்டு துண்டாய்ப் பறக்கிறது' என்று அவர் கண்ட காட்சியை வருத்தத்துடன் தெரிவிக்கின்றார்.

இப்படிப்பட்ட ஏடுகளை வைத்துக்கொண்டு எழுத் தெழுத்தாகக் கூட்டிப்படித்து, பதம் பதமாகப் பழுது பார்த்து, பரிசோதனை செய்வதற்கு எவ்வளவு பொறுமை வேண்டும்? எத்துணைப் புலமை வேண் டும்? அளவிறந்த பொறுமையோடும் அருமையான புலமையோடும் சிந்தாமணி முதலிய பெரிய நூல்களை அச்சிட்டு வெளிப்படுத்திய ஐயரவர்களைத் தாமோத ரம் பிள்ளையவர்கள் மனமாரப் பாராட்டுகின்றார். பெற்றவளுக்கன்றோ தெரியும் பிள்ளைப்பேற்றின் அருமை. பதிப்பாசிரியரைக் குறித்துப் பிள்ளையவர் கள் கூறுவதைக் கேளுங்கள்:—'பரிசோதனாசிரியர் படும் கஷ்டம் ஓர் அரிய பழைய நூலைச் சுத்த மனச்சாட்சியோடு பரிசோதித்து அச்சிட்டார்க்கன்றி விளங்காது. தூக்கினல் அன்றோ தெரியும் தலைச் சுமை? ஒன்றற்கொன்று ஒவ்வாத இருபது, இரு பத்தைந்து பிரதிகளையும் அடுக்கி வைத்துக்கொண்டு

என் கண் காணச்சிந்தாமணிக்காவியத்தைப் பரிசோதனை செய்து, பதிப்பித்த கும்பகோணம் வித்யாசாலைத் தமிழ் பண்டிதர் ஸ்ரீமத் உ. வே. சாமிநாதையரைக் கேட்டால் 'சற்றே தெரியலாம். எனக்கு அவரும் அவருக்கு நானுமே சாட்சி' என்று பிள்ளையவர்கள் கூறுகின்றார். இவ்வாறு கால் வருந்த ஏடுதேடி கண் வருந்த ஆராய்ந்து தமிழ்க்கலைகளைப் பாது காத்த அறிஞர்களின் அருஞ்சேவையை இப்போதுள்ள இலங்கைக் கவிஞர் ஒருவர் 'தமிழ்த்தாலாட்டு' என்ற பாட்டிலே நன்றாக எடுத்துக் கூறியுள்ளார் :

முச்சங்க வாழ்வும்
 முடிமன்னர் காவலும் போய்
அச்சத்தின் மேலும்
 அயற்பழியும் ஆயினவோ
ஆதரிப்பார் போனார்கள்
 ஆடையணி இல்லையென்று
மாதரசி நொந்து
 மனக்கவலை கொள்ளுதியோ
சீரழிந்து கெட்டுச்
 சிதைந்து நிரைமாறிப்
பேரழிந்து பூஞ்சு
 பிடித்துப் பிடியாகி
முன்பின் முரளி
 முழுதும் புழுஉழுது
கம்பை நடுமுரிந்து
 கட்டவிட் டுச்சிதரி
மூலைக்கு மூலை
மடங்கி முடங்கிக்கிடந்த

கோலத் திருவா
பரணக் குவையெல்லாம்
வாலறிவின் மேலோர்
வருந்தி எடுத்தார்கள்
ஊணும் துகிலும்
உடற்சுகமும் கைப்பொருளும்
நாணும் கைவிட்டவர்கள்
நாடி எடுத்தார்கள்
நாடி எடுத்து
நலனழியா மல்திருத்தி
நீடுலகில் எங்கும்
நிறைய அளித்தார்கள் ”

என்ற தாலாட்டுப் பாட்டு, ஏடு காத்து பீடுடையாரைப் பாராட்டுகின்றது.

இத்தகைய திராத தொல்லைகளின் இடையே பிள்ளையவர்கள் பதிப்பித்த நூல்கள் புலவர் உலகத்தில் தலை சிறந்து விளங்குவன என்று சொல்லவும் வேண்டுமோ? அவர்கள் அச்சிட்ட தொல்காப்பியம் செந்தமிழ் மொழியின் பழமையான இலக்கணம். தமிழின் தொன்மைக்கும் செம்மைக்கும் ஒரு தனிச் சான்றாக நிற்பது அவ்விலக்கணமே. இனி நற்றமிழ்ப் புலவராகிய நக்கீரர் இயற்றியதாகக் கொள்ளப்படும் இறையனார் அகப்பொருளுரை பழங்காலத் தமிழின் உரை நடைக்கு ஓர் எடுத்துக்காட்டாக இலங்குவது. இன்னும் பிள்ளையவர்கள் வெளியிட்ட வீரசோழியம் என்னும் இலக்கண நூல் தமிழ் மொழியின் வரலாற்றில் ஒரு தனியிடம் பெற்றுள்ளது. ஏறத்தாழ எண்ணூற்றைம்பது ஆண்டு

களுக்கு முன்னே எழுதப்பட்ட இவ்விலக்கணம், தமிழ் மொழியின் இடைக்கால இலக்கியத்திற்கு இலக்கணம் என்று கருதப்படுகின்றது. தமிழ் நாட்டிலே வீரசோழன் என்னும் பெயருடைய வீரராஜேந்திரன் பெருமன்னனாக அரசு வீற்றிருந்த போது இயற்றப்பட்ட இவ்விலக்கணம் அவன் பெயர் தாங்கி நிலவுகின்றது. பிள்ளையவர்கள் தொண்டைமான் புதுக்கோட்டையில் நீதிபதியாக இருந்தபோது அச்சிட்டு வெளிப்படுத்திய இலக்கண விளக்கம் என்ற நூல் தமிழ் நாட்டிலே 'குட்டித் தொல்காப்பியம்' என்று கலையறிந்தோர் போற்றுதற்குரிய ஏற்றம் வாய்ந்தது. திருவாரூரில் சுமார் முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னே சிறந்த தமிழ்ப்புலவராய்த் திகழ்ந்த வைத்தியநாத தேசிகரால் இயற்றப்பட்டது, இவ்விலக்கணம். எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐந்து இலக்கணங்களையும் உடைய இந்நூல் தமிழ்ப்புலமை உலகத்தில் பெரிதும் பாராட்டப் படுகின்றது.

பிள்ளையவர்கள் சில இலக்கிய நூல்களையும் ஆராய்ந்து பதிப்பித்தார். சங்கநூல்களுள் 'கற்றறிந்தோர் ஏற்றும் கலி' என்று சிறப்பிக்கப்பட்ட கலித்தொகையையும், சிறு காப்பியங்களுள் சிறந்ததெனக் கருதப்படும் சூளாமணியையும், தக்கோர் புகழும் 'தணிகைப் புராண' த்தையும் பதிப்பித்து உதவியவர் பிள்ளையவர்களே.

இவ்வாறு தமிழ்த் தாய்க்குத் தொண்டு செய்த பிள்ளையவர்கள் சென்னைப் பல்கலைக் கழகத்தில் பல ஆண்டுகள் தமிழ்ப் பரீட்சகராக இருந்தார்.

அப்போது சூரியநாராயண சாஸ்திரி என்னும் பரிதி மாற்கலைஞர் பீ. ஏ. பரீட்சையில் தமிழ்ப்பாடத்தில் முதலிடம் பெற்றுத் தேறினர். தமிழறிஞராகிய சாஸ்திரியாரைப் பிள்ளையவர்கள் அன்போடு தம் வீட்டுக்கு அழைத்து அவரோடு அளவளாவினர். ஆங்கில இலக்கியத்திலும் தமிழ் இலக்கியத்திலும் சிறந்த ஆர்வமுடையவராய் உரையாடிய சாஸ்திரியாரை நோக்கி 'நான் ஆங்கிலத்தின் ஒரு செய்யுள் தருகிறேன்; அதைத்தமிழிலே செய்யுளாக மொழி பெயர்த்துத்தாரும் பார்ப்போம்' என்று சொல்லி, ஷேக்ஸ்பியர் எழுதிய வெனிஸ் வர்த்தகன் என்ற நாடகத்தில் நான்கு வரிகளை எடுத்துக் கொடுத்தார், பிள்ளையவர்கள். அவர் கொடுத்த வரிகள் இவை:—

" The man that hath
no music in himself
Nor is not moved with
concord of sweet sounds
Is fit for treason,
strategems and spoils
Let no such man be trusted "

இப்பாடலை உடனே மொழிபெயர்த்து விட்டார் சாஸ்திரியார். அவர் ஆக்கிய தமிழ்ப்பாட்டையும் கேளுங்கள்:—

" கன்னலங் கனிந்த பாடல்
காயகன் அல்ல னேனும்
இன்னிசை கேட்டு நெஞ்சம்
இளகிடாதிருப்பான், வஞ்சம்

மன்னவர் துரோகம் ஆதி
மாபவம் செய்யத்தக்கான்
அன்னவன் தனைநம் பாமல்
அகற்றிட வேண்டுமென்றே ”

என்ற மொழி பெயர்ப்பைக்கேட்டு அகம் மகிழ்ந்த பிள்ளையவர்கள் பல்கலைக் கழகம் அளித்த பட்டத்திற்கு மேலாகத் 'திராவிட சாஸ்திரி' என்று வழங்குவது வழக்கமாய்விட்டது

“தமிழே தெய்வம் ; தமிழ்ப்பணியே' தவம் எனக் கருதி வாழ்ந்த பிள்ளையவர்கள் இருபதாம் நூற்றாண்டு பிறந்த நாளிலே இவ்வுலக வாழ்வை நீத்தார். அவர் இறந்த செய்திகேட்ட செந்தமிழ்நாடு பெருந் துயரில் மூழ்கிற்று. திராவிட சாஸ்திரியார் தமது ஆறாத் துயரத்தைப் பாட்டாலும் உரையாலும் ஞானபோதினி என்னும் பத்திரிகையில் வெளியிட்டார். அவர் எழுதினார்—“ புது நூற்றாண்டு பிறந்து யாவும் இனிது செல்லும் என்று எண்ணி எதிர் பார்த்து நின்ற நம் தமிழுலகம், பெரிதும் துன்புறத் தக்கதோர் நிகழ்ச்சி கேட்டு நடு நடுங்குகின்றது. அந்தோ புது நூற்றாண்டு பிறந்த அற்றைஞான்றே செந்தமிழுலகில் செம்மை சான்று விளங்கிய நமது ராவ்பகதூர் சி. வை. தாமோதரம் பிள்ளையவர்கள் இவ்வுலக வாழ்வை நீத்துச் சிவபிரான் திருவடி நீழலிற் சென்று சேர்ந்தனர். என்னே உலகம் என்ன வாழ்க்கை ”

இவ்வாறு எழுதிய சாஸ்திரியார் தாம் பிள்ளையவர்கள்பால் வைத்திருந்த பெருமதிப்பிற்குச் சான்றாக ஒரு பாட்டும் இயற்றினர்.

" காமோதி வண்டர்
கடிமலர்த்தேன் கட்டுதல் போல்
நாம்ஓது செந்தமிழில்
நன்நூல் பலதொகுத்த
தாமோ தரம்பிள்ளை
சால்பெடுத்துச் சாற்ற எவர்
தாமோ தரமுடையார்?
தண்டமிழ்ச்சேந் நாப்புலவீர்"

என்பது பரிதிமாற் கலைஞர் பாராட்டு.

---

## கனக சபைப் பிள்ளை

[அ. மு. பரமசிவானந்தம்.]

தோன்றிய நாள் தொட்டுத் தெய்வத் தமிழ் மொழியைப் பல்லாற்றானும் ஓம்பி வளர்க்கும் பெரியவர்கள் அவ்வப்போது தோன்றி, வாழ்ந்து, தமிழின் வளம் பெருக்கி அதன் சீரிளமைத் திறங் குன்றாவகையில் தொண்டு செய்து வந்துள்ளனர். எத்தனையோ அறிஞர்தம் பெயர்கள் நம்மிடை தற்போது இல்லை. தமிழ்நாட்டில் மட்டுமின்றித் தமிழ் வழங்கும்—இலங்கை, மலேயா போன்ற பிற நாடுகளிலும் அன்றும் இன்றும் தமிழ்ப் பயிர் ஓம்பும் புலவர்களும் புரவலர்களும் வாழ்ந்து வருகின்றார்கள். அவர்களுள் சிறப்பாக நம் பாராட்டுதலுக் குரியவர்கள் யாழ்ப்பாணத் தமிழ் மக்களாவர்.

தமிழன் தன்னைப் பற்றியே பேசிப் பெருமை கொள்ள நினையாதவன். தன்னைத்தான் தாழ்த்திக் கொள்ளும் பண்பாட்டில் தலை சிறந்தவன். எனவே அவனது பெருமை வாய்ந்த முற்கால வரலாறுகளை யெல்லாம் அவன் எழுதிவைக்க விரும்பவில்லை.

அந்தக் காரணத்தால் ஒருவேளை தமிழனது சென்ற காலச் சிறப்பு மங்குமோ என்று அஞ்சக்கூடிய நிலை ஏற்பட்டது. பிற நாடுகளெல்லாம் தம் பண்டைப் பெருமையைக் கூட்டியும் சேர்த்தும் ஏற்றமுறப் படும் அதே வேளையில், தமிழன் தனக்கு இயற்கையாக உள்ள பெருமையை எண்ண மறந்தான். அந்த மறப்பைப்பற்றி உன் சென்ற காலச் சிறப்பு இது—என்று எடுத்துக்காட்ட முன்வந்த பெருமை இன்றைக்கு 50 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த யாழ்ப் பாணப் புலவர் கனகசபைப்பிள்ளை அவர்களுக்கே உண்டு.

கனகசபைப்பிள்ளை அவர்கள் தமிழாசிரியர் அல்லர். தமிழ்த்துறையில் பணியாற்றியவருமல்லர். அவர் பணி அஞ்சலகத்தில் நடைபெற்றது. எனினும் தமிழ்த் தாய்க்குத் தொண்டாற்ற வேண்டும் என்ற தூய எண்ணமே அவரை—ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகளுக்கு முன் தமிழர்—என்ற வரலாற்று நூலை எழுத வைத்தது. ஆம், அவர்மறைந்து இன்றைக்கு 45 ஆண்டுகள் ஆகின்றன. அவர் எழுதிய அந்தப் பெருநூலே அவர்தம் பெருமையை வாழவைக்கின்றது. அவருடைய வாழ்க்கை வரலாற்றைக்கண்டு பின் நூல் வழிச்சென்று அவர் தொண்டின் சிறப்பை அறியலாம்.

ஏறக்குறைய இன்றைக்கு ஒரு நூற்றாண்டுக்கு முன் கனகசபைப் பிள்ளையின் தந்தையார் விசுவநாதப்பிள்ளை அவர்கள் யாழ்ப்பாணத்திலுள்ள மல்லாகம் என்னும் ஊரிலிருந்து சென்னைக்கு அழைத்து வரப்பட்டார். ஆங்கிலத் தமிழ்ப் பேரகராதி தொகுத்த

மேலைநாட்டுச் செல்வர் வின்ஸ்லோ பாதிரியார் அவர்கள் விசுவநாதரை அங்கிருந்து சென்னைக்கு அழைத்து வந்ததாகக் கூறுகின்றனர். பெர்சிவல் பாதிரியாருடன் வந்ததாகவும் கூறுவர்.

விசுவநாதர் ஆங்கிலத் தமிழ் அறிவு பெற்றவர். எனவே அவருக்கு சென்னைக் கல்வித்துறைத் தலைவர் அலுவலகத்தில் மொழி பெயர்ப்பாளர் பணி கிடைத்தது. வின்ஸ்லோ அவர்தம் ஆங்கிலத் தமிழ்ப் பேரகராதி வெளிவருவதற்கு அவர் பெரிதும் உதவினர். அத்துடன் விசுவநாதர் தாமே பள்ளிப்பிள்ளைகளுக்கென சில தமிழ் நூல்களை எழுதிப் புகழ் பெற்றார் சிறந்த தமிழ்ப் பற்றும் மொழித் தொண்டும் புரிந்த இவ் விசுவநாதரின் அருமை மைந்தரே கனகசபைப் பிள்ளை அவர்கள்.

25-5-1855-ல் சென்னை கோமளீசுவரன் பேட்டையில் கனகசபைப் பிள்ளை அவர்கள் பிறந்தார். இளமையிலேயே பிள்ளையவர்கள் மதிநலம் வாய்ந்தவராக இருந்தனர். இளைஞராய் இருக்கும்போதே இவர் பட்டம் பெற்றமையின் இவரைப் பட்டதாரிப் பையன் என அழைத்தனர். இவருடன் ஆனரபிள் ராமநாதன், ஸர் பொன்னம்பலம் முதலியார் சென்னை அரசாங்கக் கல்லூரியில் கல்வி பயின்றதாகக் கூறுவர். ஆங்கிலக் கல்லூரியில் பயிலும் நாளிலேயே பிள்ளை அவர்களுக்குத் தமிழ் மொழியில் தளராக் காதல் உண்டாயிற்று. அன்னைத் தமிழை தந்தையார் மூலம் நன்குபயின்றார்.

பி. ஏ. பட்டம் பெற்றபின் வழக்கறிஞர் பயிற்சிப் படிப்பைத் தொடர்ந்து படித்து முடித்தார். அவ்

வேளையில் அவருக்கு மணம் ஏற்பாடாயிற்று. அவர் தம் அம்மானாகிய டாக்டர் பொன்னையா பிள்ளை தம் மகள் செல்லம்மாளை அவருக்குக் கொடுக்க இசைந்தார். அவர் மதுரையில் பணியாற்றி வந்தார். 1876ல் பிள்ளை அவர்கள் மணவாழ்வில் புகுந்தார். மணவாழ்வை மேற்கொண்ட பிள்ளையவர்கள் தம் மாமனார் வீடாகிய மதுரைக்கே சென்றார். அங்கே சிலகாலம் மதுரை மாவட்ட நீதி மன்றத்தே வழக்கறிஞர் பணியில் தொண்டாற்றினார். சிறிது காலம்தான் அங்கே பணியாற்றியிருந்திருப்பார் போலும். விரைவில் அவர் சென்னையை அடைந்து அஞ்சல் அலுவலகத்தே-(Post-Office) தம் பணியினை மேற்கொண்டார். சென்னை மாநில அஞ்சலகத் தலைவர் அலுவலகத்தே (Post Master General's Office, Madras.) அஞ்சல் நிலைய மேற்பார்வையாளராக அவர் பணி செய்யத் தொடங்கினார். அவர் தம் ஊக்கமும் உழைப்பும் அவரை மேன்மேல் உயர்த்தி உயர்நிலை மேற்பார்வையாளர்—Supdt. of Post Offices—பதவிக்கு உரியவராக்கின. அவர்தம் பணிகள் அவரது தமிழ்த் துறைத் தொண்டுக்குத் துணை செய்தன. தமிழ் நாட்டு ஊர் தோறும் சென்று பலப்பல அலுவலகங்களைப் பார்வையிடும் பொறுப்பு பிள்ளை அவர்களுக்கு இருந்தது. அலுவலகங்களைப் பார்வையிட்டதோடு அமையாது, அவ்வவ்வூர்களில் என்னென்ன நூல்கள் ஏட்டுப் பிரதிகளில் உள்ளன என்று ஆராய்வார் பிள்ளை அவர்கள். டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள் ஏட்டுப் பிரதிகளை அச்சேற்றியகாலம் அது. பிள்ளை அவர்கள் சேகரித்த பலபிரதிகளை அவருக்

குக் கொடுத்து உதவினார். இன்னும் பிள்ளை அவர்கள் செல்லுமிடமெல்லாம் உள்ள கல்வெட்டுகளையும் பிறவற்றையும் ஆராயும் தொண்டையும் மேற்கொண்டிருந்தனர். அவர் மேலும் சிலகாலம் வாழ்ந்து, அலுவலகப் பணியிலும் ஓய்வு பெற்று இருந்திருப்பாரானல், பல அரிய ஆராய்ச்சி நூல்கள் மூலம் தமிழ் நாட்டு ஒளியை மங்கா வகையில் தூண்டி விளக்கமுறச் செய்திருப்பார்.

தன் அலுவலகப் பணியில் சிறிதும் வழுவினரல்லர் பிள்ளை அவர்கள். அவர்தம் ஆற்றலும் அமைவும் கருதி அத்துறைத் தலைவர்கள் அவர்தம் தொண்டைப் போற்றினர். தம் இறுதிநாள் வரையில் பிள்ளை அவர்கள்-அப்பணியிலேயே கருத்திருத்தி வந்தனர். கடைசியாக அவர்கள் காஞ்சிபுர அஞ்சல் நிலையத்தை மேற்பார்க்கச் சென்றபோது அங்கேயே 21-2-1906 நாளாகிய சிவராத்திரி நாளிலே மறைந்தார். அவர்தம் தூய சிவ நெறியும், கடமை உணர்ச்சியும், அமைதி உள்ளமும் அவரைக் கற்றார் வாழ் காஞ்சியிலே சிவராத்திரி நாளிலே ஏகம்பன் இணையடிக்கு உரிமையாக்கின என்றார்கள் அறிஞர்கள்.

கனகசபைப் பிள்ளை அவர்கள் அறிவைப் போற்றி வளர்த்ததோடமையாது-உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே-என்ற மொழிக் கிணங்க நல்ல முறையில் உடம்பைப் பேணி வளர்த்தார்கள். இளமையிலேயே நல்ல தேகப்பயிற்சி செய்து திண்ணிய உடலைப் பெற்றவராகி விளங்கினர்கள். சில ஆண்டுகள் இவர் வலங்கிமான் சோதிடர் உபதேசத்தால் யோகப் பயிற்சி செய்தார் என்றும் கூறுவர்

இவரது உடற்பொலிவைப்-பரந்த நெற்றி, அகன்ற உருண்டை முகம், குவிந்த கண், பெரிய தலைப்பாகை, கருத்தமீசை, எடுத்த தோற்றம் ஆகிய இவை, பார்த்தவுடனேயே இவர் ஒரு நல்ல தமிழர் என்பதை எடுத்துக்காட்டுகின்றன-என்று தமிழர் போற்றத் தவறவில்லை. இத்தகைய திண்ணிய உடலும் நுண்ணிய அறிவும் பெற்ற இவரை, இவரது தந்தையாரோடு யாழ்ப்பாணத்திலிருந்து வந்த தமிழ்ப்பணி புரிந்த சி. வை. தாமோதரம் பிள்ளை அவர்கள் போற்றும் முறை நோக்கத்தக்கது.

'யாழ்ப்பாணத்து மல்லாகம் விசுவநாதப் பிள்ளை அவர்கள் புத்திரரும் தமிழ்க்கலை விநோதம் தமக்குப் பொழுது போக்காக உடையவருமான ஸ்ரீ கனக சபைப்பிள்ளை-என்று தாமோதரம் பிள்ளை அவர்கள் இவரைப் போற்றித் தம் கலித்தொகை முகவுரையில் 1887-ம் ஆண்டு கூறியிருப்பது அறிந்து இன்புறத் தக்க தொன்றாகும்.

மேலும் இவரது-ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகளுக்குமுன் தமிழர்-என்ற நூலைப் பயின்றவராகிய டாக்டர் வி. ஏ. ஸ்மித் என்னும் வரலாற்று ஆங்கிலப் பேராசிரியர் இந்நூலைப் பயின்ற காரணத்தால்தான் போலும்—“இந்திய சரித்திரம் தென்னிந்தியாவிலிருந்து தொடங்கி எழுதப் பெறாத வரையில், அது முற்றுப் பெற்றதாகாது”—என்று கூறிச் சென்றனர்.

இவர் இளமையிலிருந்தே தமிழ்த்துறையில் ஊக்கங்காட்டி உழைத்து வந்தபோதிலும் பிற்றைநாளில் பெருக்கங்கொண்டமைக்கு அறிஞர் ஒரு காரணம்

காட்டுவர். இவர் தமது 29-வது வயதில்-1884ல்-தம் தந்தையையும் அடுத்த ஆண்டிலேயே தம் தாயையும் இழந்தார். அத்துடன் அடுத்தடுத்துத் தம் இரண்டு குழந்தைகளை இழக்கும் நிலையும் ஏற்பட்டது. இப்படிப் பெற்றோரையும் பெற்றோரையும் ஒரு சேரத் தொடர்ந்து சில்லாண்டுகளில் இழக்க நேர்ந்த கொடுமையே அவர் உள்ளத்தை அழியாத் தமிழன்னையின் வளர்ச்சித்துறைக்கு செலுத்தியது என்பர். எப்படியாயினும் அவர் அலுவலுக்கிடையில் அன்னைத் தமிழுக்கு என்றென்றும் போற்றக்கூடிய வகையில் அவர் ஆற்றிய பணியினை தமிழ்நாடு உள்ளவரை-ஏன் உலகம் உள்ளவரை-தமிழரால் வரலாற்று ஆசிரியர்களால் மறக்க முடியாது. இவரது அறிவாற்றலை அன்றைய தமிழகம் போற்றிற்று. கல்வித்துறையில் இல்லாவிட்டாலும் இவரை அத்துறைக்கு ஈர்த்து பல்கலைக் கழகத்தார் பி. ஏ. எம். ஏ. பட்டங்களில் தேர்வாளராக்கினர். மதுரைத் தமிழ்ச் சங்கம் இவரது ஈடும் பெருமையும் கருதி-1905-ம் ஆண்டில் அச்சங்க ஆண்டு விழாவிற்கு தலைவராய் வரவேற்றது.

பிள்ளையவர்கள் தமிழில் மட்டுமின்றி ஆங்கிலத்திலும் சிறந்து விளங்கினர். தமிழில் பல கட்டுரைகள் எழுதியது போன்றே ஆங்கிலத்திலும் எழுதினார்கள். இருமொழிகளிலும் உள்ள பயன்படுபவனவற்றை மாற்றிமொழி பெயர்த்தனர். இவரது ஆங்கில எழுத்தின் சிறப்பு எட்வர்ட் இளவரசர் இந்திய நாட்டுக்கு வந்தபோது இவர் ஆங்கிலத்தில் பாடிய வரவேற்புக் கவிகளால் நன்கு விளங்குமென்பர்.

இவ்வளவு அரும் பேராற்றல் பெற்ற பெரியார் பிரிந்து இன்றைக்கு 45 ஆண்டுகள் ஆகின்றன. எனினும் அவர் புகழ் மங்காமல் உள்ளது. ஏன்? அவர் எழுதிய "1800 ஆண்டுகளுக்கு முன் தமிழர்" என்ற நூலே அவரை என்றும் வாழவைக்கின்றது. ஆம், இனி அந்நூல் வழி அவர் பெருமையைக் காண்போம்.

தமிழர் தம் பண்டை வரலாறுகளை அறியச் சாதனமாக இருப்பன அக்காலத்து எழுதப்பட்ட இலக்கியங்களே ஆகும். கடைச்சங்க காலமென்று பேசப்படும் இன்றைக்கு ஆயிரத்துஎண்ணூறு ஆண்டுகளுக்கு முன் எழுந்த இலக்கியங்களை, பத்துப்பாட்டு எட்டுத் தொகை என்று பாகு படுத்தினர். அத்துடன் சிலப்பதிகாரம் மணிமேகலை போன்ற காவிய இலக்கியங்களும் எழுந்தன. இவற்றை வெறும் எழுத்தோவியம் என்று மட்டும் எண்ணிய காலம் ஒன்று இருந்தது. ஆனால் கனகசபைப் பிள்ளை அவர்கள் வெறும் எழுத்தோவியங்கள் எனக் கொள்ளாது தமிழர் தம் பண்டைப் பெருமையை விளக்கும் வரலாற்று ஓவியங்களாகக் கொண்டனர். இந்த இலக்கியங்களின் உறுதுணை கொண்டு அன்றைய தமிழ்நாட்டு வரலாற்றை முதன் முதன் வெளியிட்ட பெருமை இவருக்கே உண்டு.

தம் ஆராய்ச்சியிற் கண்ட முடிபுகளை அவ்வப்போது 1895க்கும் 1901க்கும் இடையில் - மதராஸ் ரெவியூ - என்ற ஆங்கில இதழில் வெளியிடலானார் பிள்ளையவர்கள். அவற்றுள் முதற் கட்டுரை வெளியான உடனேயே அதைப்படித்து, அதன் ஏற்றத்

-மைப் புகழ்ந்தவர் பலராவர். அவருள், அக்காலத்துச் சென்னை உயர்நீதி மன்ற தற்காலிக தலைமை நீதிபதியாக இருந்த சர் சுப்பிரமணிய ஐயர் அவர்கள் சிறந்தவர். அவர் பிள்ளை அவர்களை ஊக்கி மேலும் அது போன்ற பல ஆராய்ச்சிக் கட்டுரைகளைத் தொடர்ந்து எழுதி வர வேண்டினர். அவ்வாறே பிள்ளை அவர்கள் ஆறு ஆண்டுகளிலும் தொடர்ந்து பல கட்டுரைகள் வெளியிட்டனர். கட்டுரைகள் பல வெளிவந்தபின், அவை வெறும் இதழ்களில் சிதறிய கட்டுரைகளாக இருப்பதினும், தொகுக்கப் பெற்றுச் சிறந்த நூலாகப்பெறின் சிறந்த பயன் நாட்டுக்கும் உலகுக்கும் உண்டு என்றனர் நண்பர். அவர் தம் விழைவையெல்லாம் நிறைவேற்றவும், தமிழரின் பண்டைப் புகழ் பாரில் ஓங்கவும் திரு. பிள்ளை அவர்கள் 16-1-1904ல் -1800 ஆண்டுகளுக்கு முன் தமிழர் - என்ற நூலை வெளிக் கொணர்ந்தனர். இந்நூலைத் தன்னை இத்துறையில் தளராவகையில் ஊக்கிய உயர்நீதி மன்றத் தலைவர் சர் சுப்பிரமணிய ஐயர் அவர்களுக்கே உரிமையாக்கினர்கள். தமிழர் மட்டுமின்றி எந்நாட்டவரும் இந்நாட்டியல்பை அறிந்து போற்றும்படி ஆங்கிலத்தில் பிள்ளை அவர்கள் இந்நூலை எழுதித் தந்தது ஒரு பெரும் பேறென்று கொள்ளல் வேண்டும்.

இருபதாம் நூற்றாண்டின் இடைக்காலத்தில் நிற்கின்ற நமக்கு நம்நாட்டு வரலாற்றை ஆராய்வது அவ்வளவு கடினமாகத் தோன்றாது. பலர் அத்துறையில் வழிகாட்டியுள்ளனர். வரலாற்று மூலங்கள் பலப்பலவாகப் பல்கிப் பெருகியுள்ளன. ஆனால் இந்த நூற்றாண்டின் தொடக்கத்திலே, தமிழர் தம் பண்டை வர

லாறு இன்னதென ஆராயவேண்டும் என்ற எண்ணமே தோன்ரு. அற்றை நாளிலே தாமே முன்னின்று முயன்று முதன்முதலாக இத் தமிழ் நாட்டு வரலாற்று நூலைக் கொண்டுவந்த கனகசபைப் பிள்ளையைத் தமிழகம் தலைமேற்கொண்டு போற்றக் கடமைப்பட்டுள்ளது. இதுவரை தமிழக ஆராய்ச்சியிற் புகுகின்றயாரும் அந்நூலைப் பற்றிக் கூருது செல்லவில்லை. தக்க சான்றுகளும் மூலங்களும் கிடைக்காத அந்த முன்னைய நாளிலே அவர்கண்ட முடிபுகளில் ஒரு சில தற்போது முரண்பட்டதாகக் காணப்படினும், பெரும்பாலான கருத்துக்கள் அன்றும் இன்றும் ஒப்பவே ஏற்றுக் கொள்ளப்பட்டனவாக அமைவது அவர்தம் ஆழ்ந்த ஆராய்ச்சி நிலையினைப் புலப்படுத்துவதாகும்.

பிள்ளையவர்கள் தம்நூலைப் பதினறு பகுதிகளாகப் பிரித்திருக்கிருர்கள். அவற்றுள் தமிழக நிலப் பிரிவுகளையும், தமிழகத்தைச் சுற்றியுள்ள நாடுகளையும், அன்றைத் தமிழர் அந்நிய நாட்டாரோடு கொண்ட வாணிய வளனையும், அன்று தமிழ் நாட்டில் வாழ்ந்த பழங்குடி மக்களின் நிலையும் எடுத்துக்காட்டியுள்ளார்கள். அவற்றுடன் தமிழ்நாட்டை ஆண்ட முடியுடை மூவேந்தர்களாகிய சேர, சோழ, பாண்டியரைப் பற்றியும், அவரை அண்டியும், தனித்தும் வாழ்ந்த சிற்றரசர்களைப் பற்றியும் குறித்துள்ளனர். மேலும் அக்காலத்து வாழ்ந்த மக்களின் வாழ்க்கை முறையையும், பிற பண்பாடுகளையும், பிள்ளை அவர்கள் தெள்ளத் தெளியக் காட்டியுள்ளனர். நூலின் பிற்பகுதியில் அன்று தோன்றிய குறள், சிலப்பதிகாரம், மணி

மேகலை போன்ற வாழ்விலக்கியங்களைப் பற்றியும், அவை பாடிய புலவர்களைப் பற்றியும், பிற புலவர்களைப் பற்றியும், நன்கு ஆராய்ந்துள்ளனர். இறுதியாக அன்றைய தமிழ் நாட்டுச் சமய நிலைப் பற்றியும் அது வாழ்வோடு பிணைக்கப்பட்ட விதத்தையும் கூற மறக்கவில்லை பிள்ளை அவர்கள். இவ்வாறு எல்லாப் பொருள்களையும் ஒரு சேரத் தொகுத்த ஒரு பெரு வரலாற்று நூலைத் தமிழ்இலக்கியங்களையும், அக்காலத்துத் தமிழ் நாட்டுக்கு வந்து சென்ற பிற நாட்டு அறிஞர்தம் குறிப்புகளையும் கொண்டு முடித்து, இறுதியில் தமிழன் தற்போதுள்ள நிலையையும், இனியும் தமிழ் நாடு தன் பண்டைப் பெருமையில் தளராதோங்க வேண்டுமானல் என்ன செய்யவேண்டும் என்பதையும் கூறி முடிக்கின்றார்கள்.

சிதறுண்ட தமிழகத்தைச் செம்மைப் படுத்த எண்ணிய கனகசபை பிள்ளை அவர்களின் - தமிழர் 1800 ஆண்டுகளுக்கு முன் - என்ற நூலின் இறுதி வாக்கியங்கள் இவை.

“தமிழர்கள் இன்னும் தங்கள்பழைய மூடப்பழக்க வழக்கங்களைப் பற்றி எண்ணிக்கொண்டு, அஞ்சாததற்கெல்லாம் அஞ்சி, அனைத்தும் பொய் என்று வேதாந்த மனப் பான்மை கொண்டு, வாழ்வை வெறுத்து வருங்கால வளத்தை கனவு கண்டுகொண்டு மட்டும் இருப்பார்களானல் அவர்கள் நிச்சயமாக, உலகவாழ்வுப் பாதையில் எங்கோ பின்தங்கி காட்டுமிராண்டிகளாகத்தான் இருப்பார்கள்.”

ஆனல் அவர்கள் மேலை நாடும் கீழைநாடும் இணைந்ததால் உண்டான புது நாகரிகத்தைப் பின்

பற்றி, பேராசையின்றி, சாதிமத வேறுபாடுகளைக் களைந்து, ஆண்களோடு பெண்களையும் கல்வித் துறையில் முன்னேற்றி அவர்களை நல்ல வாழ்வாசிகளாகவும் தாயர்களாகவும் ஆக்கி, அறிவுத்துறையால் அறிவியல் -(Science)- துறையைச் சீராக்கி, கைத்தொழிற் கல்லூரிகளை ஓம்பி வளர்த்து குறுகிய மனப்பான்மை கொண்ட சமயத் துறையிலுள்ள மாசுகளைப் போக்கி செம்மைப்படுத்தி, இந்துசமயமே கடவுளைக் காட்டும் மெய்ச் சமயம் என்பதை நிலைபெறச் செய்து தலைநிமிர்ந்து வாழத் தொடங்குவார்களானல் அத் தமிழர்கள் உலகில் முன்னேறும் பல பெருஞ் சமூகங்களிடைத் தாமும் முன்னேறி ஏற்றமுறுவர்.

அறிவிலும், முன்னேற்றத்திலும் மேலோங்கும் அத்தமிழர் தம் தலைவர்கள் சீர்திருத்தங்களுக்குக் காலம் வரும் என்று காத்திராது, தாங்களே மற்றவர்களுக்கு வழிகாட்டிகளாக நின்று, புத்தம்புதிய வாழ்வுக்கு வேண்டிய வளம் பெருக்கும் நல்ல கருத்துக்களைத் தம்தம் வீடுகளிலும், சுற்றிலுமுள்ள சுற்றத்தார் வீடுகளிலும், ஊர்களிலும் மெள்ள மெள்ள, வெறும் ஆவேச உணர்ச்சி வகையிலல்லாது செயல் துறையில் புகுத்தி நாடுவாழ நல்வழி காட்டுவார்களானல் அவர்தம் அரும் பெயர்கள் தமிழர் தம் வருங் காலத்தில் அவர்தம் இனம் உள்ளவரையில் வழி வழியாக நிலை பெற்றிருக்கும் என்பது உறுதி.''

இவையே கனகசபைப் பிள்ளை அவர்களின் இறுதிமொழிகள். இவை ஐம்பது ஆண்டுகளுக்கு முன் எழுதப்பெற்றிருப்பினும், இன்றைக்கும் தமிழர்களுக்கு ஏற்ற உரையாக அமைகின்றன. தமிழர்கள்-சிறப்பாகத் தலைவர்கள்-அவர்தம் வாய்மொழியைப் போற்றி நடந்து நாட்டை வாழ்விப்பார்களாக.

Commercial Syndicate Presr, Madras-7.